# நீர்க் காக்கை

கந்தர்வனை நமது வாசகர்கள் நன்முய் அறிவார்கள். அவரது எழுத்தோவியங்கள் நமது கையெழுத்துப் பத்திரிகையைப் பல தடவை அலங்கரித்திருக்கின்றன. அவருடைய திறமையை நாம் நன்முய் அறிவோம். ஆதலால் நமது வசந்த மலருக்கு விஷயதானம் செய்யவேண்டு மென்று கோரினேம். முதலில் அவரிடமிருந்து பதில் வர வில்லை. திரும்பத்திரும்பக் கடிதம் எழுதியும் பயனில்லை பன்னிரண்டாவது தபாலுக்கு பதில் வந்து சேர்ந்தது. அதை இங்கே பிரசுரித்திருக்கிமேம். சில காலமாக அவர் எழுதாமல் மௌனம் சாதித்ததற்குக் காரணம் இப்பொழுது ஓரளவு விளங்குகிறதல்லவா ?

—ஆசிரியர்.

நண்பரே,

பத்திரிகையின் ஆசிரியர் என்ற முறையில் உமக்கு நான் இதை எழுதவில்லை. ஏனென்முல பத்திரிகை ஆசிரியருக்கு எழுத்துத் தேவையே ஒழிய, எழுத்துக்கு உள் மூச்சான ஜீவனைப்பற்றிய சர்ச்சை தேவையில்லை. உமக்கு வேண்டாத விஷயத்தைப் பற்றித்தான் இப்பொழுது பேசப் போகிறேன். எப்பொழுது எழுத்துப் பிறக்கிறது, அல்லது ஏன் பிறக்காமல் இருக்கிறது என்ற தத்துவ விசாரமெல் லாம் உமக்கு இல்லை; இருந்தால் கட்டாது. அதையெல்லாம் ஆராய்ந்து கொண்டிருந்தால் குறிப்பிட்ட தேதியில் பத்திரிகை வெளிவர முடியுமா என்ன? நீர் எழுத்தை விரும்புவதுதான் சரி. அதைத்தான் நம்பவேண்டும்.

ஆனால் எனக்கு அப்படி இல்லை. எனக்கு 'நான்'தான் முக்கியம்; என் அகந்தான் முக்கியம். இந்த நான் என்ன செய்கிறது, எதில் இன்பம் அடைகிறது, எதில் துன்பம் அடைகிறது, எதில் லயிக்கிறது, எதை நெட்டித்தள்ளுகிறது என்று கண்டு பிடிப்பதே வேலை. அதுவே எனக்கு இன்பம். இந்த நான் செய்யும் காரியங்களைச் சிலசமயம் என்னால் பதிவு செய்ய முடிகிறது; சில சமயம் முடியவில்லை. பிரசங்கியின் பேச்சு முழுவதையுமா ரகசியப் போலீஸ்காரன் குறுக்கெழுத்தில் எடுத்து விடுகிறான்? என் விஷயத்திலும் இப்படித்தான். வார்த்தைகளை மீறியே மனசு சில சமயம் ஓடுகிறது—ஏர்க்காலை ஏற்காத முரட்டுக் குதிரை மாதிரி. சில சமயம் அசைவின்றிப் படுத்து விடுகிறது—தண்ணீரைக் கண்ட எருமைமாதிரி. இவ்விரண்டும் அற்ற நிலையில்தான் எழுத்துடன் உறவு உண்டாகிறது.

ஆசிரியர்களுக்கு இந்தத் தத்துவம் ஏனோ தெரியவில்லை. தெரிந்ததாகக் காட்டிக்கொண்டால் பத்திரிகை முழுவதும் வெறும் தாளாகிவிடக்கூடும் அல்லவா? ஆனால் எனக்கு மாத்திரம் இந்த உண்மை முன்பு விளங்கிற்றா என்ன? இல்லவே இல்லை. இப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாக விளங்குகிறது.

நேற்று ஒரு கிராமத்துக்குப் போயிருந்தேன். அந்தி வேளை. ஏரிக்கரையின் மீதும் எட்டாக்கையிலும் பனை மரங்கள் நின்று மயங்கிக் கொண்டிருந்தன. ஏரிநீரை வாடைக்காற்று முத்தமிட்டுக் கொண்டிருந்தது. அந்த ஓசை கரையில் வந்து மோதிக் கொண்டிருந்தது. ஏரியின் ஓரத்தில் சில கொக்குகள் ஊக்கமின்றி நடைபோட்டுக் கொண்டிருந்தன. ஏரியின் நடுவில் இருந்த மேட்டின்மீது கும்பலாகச் சில கரும் பறவைகள் உட்கார்ந்திருந்தன.

''அதென்ன'' என்று கேட்டேன்.

''நீர்க்காக்கை, எப்பொழுதும் தண்ணீரில் வாழ்பவை'' என்றான் கணக்குப்பிள்ளை.

"இரவில் கூடவா?"

"ஆம்."

"இரவில், அதிலும் தண்ணீருக்குள், பறவைகள் வாழவாவது, மண்ணுவது!"

அவன் என் பேச்சை ஏற்கவில்லை. "தண்ணீரில் வாழ்வதென்றால் அந்த மேட்டில் உட்கார்ந்திருப்பானேன்?" என்று தர்க்கமிட்டேன்.

"முழுகினால் தலைமயிரை நாம் உலரவைத்துக் கொள்ளவில்லையா?" என்று குதர்க்கம் செய்தான்.

நான் விடவில்லை.

"முழுகினால் அல்லவா? தண்ணீரிலேயே கிடப்பவனுக்கு ஈரம், காய்ச்சல் என்று இரண்டு உண்டா என்ன?"

"அப்படி வேண்டாமே. தண்ணீரில் இருப்பவன் தரையை அறிய விரும்புகிறான் என்று நினைத்துக்கொள்ளலாமே."

எனக்கு மேலே பேசத் தெரியவில்லை.

அன்றிரவு அந்தக்கிராமத்தில் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துத் தூங்கினேன். எதிரில் ஒரு வரிசை புளியமரங்கள். இரவெல்லாம் புளிய மரத்தடியில் கொக்குகளின் குரல் கேட்டது. அவ்வப்பொழுது கிளைமாறிக் குந்துவதற்காகச் சிறகடிக்கும் சத்தம் கேட்டுக்கொண்டே இருந்தது. இராக் காலம், எழுந்து பார்த்தால் என்ன தெரியும்?

காலையில் எழுந்திருந்து மரங்களைப் பார்த்தேன். வண்ணான் துணி உலர்த்தியிருப்பதுபோல் கொக்குகள் தென்பட்டன. மரங்களை நெருங்கிச் சென்றேன். புளிய மரத்திலிருந்து கூட்டமாகக் கறுப்புப் பறவைகள் எழுந்து பறந்தன. நீர்க்காக்கைக் கூட்டம்! பகலில் ஏரியிலும் இரவில் மரத்திலுமாக வசிக்கும் போலும்!

திடீரென்று எனக்குச் சில உண்மைகள் விளங்கின. ஒரு வருஷம் நன்றாய் விளைந்த வயல் மறுவருஷம் ஏன் அப்படி விளைவதில்லை என்பதற்குக் காரணம் புரிந்தது. இப்பொழுது ஏன் அவ்வளவாக எழுத முடியவில்லை என்பதற்குக் காரணம் தெரிந்தது. நானும் ஒரு நீர்க்காக்கைதான்! பகற்காலத்தில் எழுத்தென்னும் ஏரியில் வாழ்கிறேன். உணவை உண்டு உற்சாகம் அடைகிறேன். அழகின் காற்றடிக்கும் பொழுது நீர்க்காக்கையைப் போல் மிதந்து எழுத்தென்னும் அலையைப் பரப்புகிறேன். இந்த ரகசியந்தான் என் முயற்சிகளில் அம்பலமாகிறது. பகல் என்றால் எனக்கும் இரவு உண்டல்லவா? அப்பொழுது ஒடுக்கம் என்னும் மரத்தில் குந்தி நீர்க் காக்கையைப் போல உறங்குகிறேன். உறக்கத்தில் எழுத வருமா? முடியுமா?

இந்த மாதிரியாக நான் ஊமையாகும் சந்தர்ப்பங்களையெல்லாம் என் சோம்பேறித்தனம் என்று பலர் கருதுகிறார்கள். உமக்குக்கூட அதே எண்ணந்தான். சண்டி செய்கிற மாட்டை ஓடச்செய்யும் வித்தையை நீர் வண்டிக்காரனிடத்தில் பார்த்திருக்கிறீர். அதட்டுகிறான், பாடுகிறான், சாட்டையை வீசுகிறான், ஜகடையில் சாட்டைக் குச்சியைக் கொடுத்துச் சத்தப்படுத்துகிறான், வாலைப் பிடிக்கிறான், ஒடிக்கிறான். ஒருவேளை கடிக்கிறான். இவ்வளவையும் பார்த்ததனாலே நீர்கூடப் பலவிதமான கடிதங்கள் எழுதியிருக்கிறீர். ஆனால் ஒன்றை மறந்து விட்டீர். இவ்வளவுக்கும் சில மாடுகள்தான் ஓடும்; சில படுத்துக்கொண்டு விடும். நான் படுக்காளி. என்னை எழுப்ப முடியாது. நானே முயன்று பார்த்துத் தோல்வி அடைந்திருக்கிறேன். உமக்கா வெற்றி கிட்டப்போகிறது? அதனால்தான் எனக்கும்—ஏன்? எல்லா இயக்கத்திற்கும்-நீர்க் காக்கைக்குத் தேவையாக இருப்பதுபோன்ற இரவும் ஒடுக்கமும் உண்டென்று நிச்சயித்துவிட்டேன். இது இயற்கையின் விதி. பகலுக்குப் பிறகு இரவு. சிருஷ்டிக்குப் பிறகு ஓய்வு.

இதெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். கலைஞர்களைப் பற்றிய மற்றொரு விஷயம் பொதுவாக யாருக்கும் தெரிய வில்லை. கலைஞன் முதலில் தோன்றும்பொழுது ஒரு சில ருடைய கவனத்தையே கவர்கிறான்-வால் நக்ஷத்திரத்தைப் போல. மற்றவர்கள் அவனை லட்சியம் செய்வதில்லை. சில நாட்களுக்குப் பிறகு எப்படியோ எல்லோருமாக அவனைப் புகழ ஆரம்பித்து விடுகிறார்கள். அவன் வேலைப்பாட்டுக்கும் 'கிராக்கி' ஏற்பட்டு விடுகிறது பத்திரிகாசிரியர்கள் சும்மா இருக்க முடியுமா? அவனை அதுவேண்டும், இதுவேண்டும் என்று தொந்தரவு செய்வார்கள். ஒரு முக்கிய விஷயத்தை மறந்தே இந்த மாதிரி தொந்தரவு செய்கிறார்கள். எந்த மனநிலையுடன் கலைஞன் முதன்முதலில் தோன்றினானோ அதே நிலையில் அவன் சாகும்வரையில் இருப்பான் என்று எண்ணி விடுகிறார்கள். உண்மை என்னவெனில், கலைஞ னுடைய மனமும் லயிப்பும் மாறிக்கொண்டே இருக்கும். கவிதை எழுதிய கலைஞனால் சாகுமளவும் அவனிடம் கவிதையையே எதிர் பார்ப்பது சரியாகாது. கவிதை கலைஞனை விட்டிருக்கலாம்; கதை அவனைப் பற்றியிருக்க லாம். எழுதுவதையே அவன் விட்டுவிட்டான் என்றால் அந்த விஷயத்தை யாரும் நம்புவதில்லை. கலைஞன் சுவரில் அடித்த ஆணியன்று என்பதை மறக்கக் கூடாது.

பொதுவாகச் சொல்வானேன்? சென்ற வருஷம் ஆரம்பம் முதல் என்னிடத்தில் ஒரு மாறுதலைக் கண்டேன். அதை நான் முதலில் பொருட்படுத்தவில்லை; இவ்வளவு புரட்சிகரமான மாறுதலை உண்டாக்குமென்றும் எதிர் பார்க்கவில்லை. வரவர எழுதுவதில் ஊக்கமும் குறைந்தது. படிப்பதிலும் குறைந்தது. இதற்கு நேர்மாறாகப் பாட்டில் மிகுந்தது; பாடுவதில் முடிந்தது

நேற்று இரவுடன் பழைய ஜன்மம் முடிந்துவிட்டது. முன்னேரத்திலேயே நான் படுத்துவிட்டேன். மணி என்ன வோ தெரியவில்லை. கனவா நனவா என்றும் தெரியவில்லை.

வெள்ளைக் கலையுடுத்த ஒரு பெண் வீணையும் கையுமாக என் முன் தோன்றினாள். எதிரே உட்கார்ந்து வீணையை இசைத் தாள். மின்னலை வெட்டித் துண்டாக்கி இருட்டில் பதித்தது போன்ற பிரமை எழுந்தது. நீரில் விழுந்த உப்பைப் போல் என் உடம்பையே காணோம்.

இந்த நிலை கலைந்தபொழுது கரிச்சான்கள் பாடிக் கொண்டிருந்தன. நக்ஷத்திரங்கள் வெளுத்துக் கொண் டிருந்தன. என் வியப்பை வடித்தெடுத்து ஆறுதலடையலா மென்று நினைத்து எழுதத் துவங்கினேன். இரண்டு பக்கந் தான் எழுத முடிந்தது. அதற்குமேல் முடியவில்லை. அப் படியே வைத்துவிட்டு மறுபடி தூங்கிவிட்டேன்.

இன்று காலை எட்டு மணிக்கு எழுந்தபொழுது அந்தத் தாள்கள்தாம் முதலில் கண்ணில் பட்டன. படித்துப் பார்த்தேன். பேய்க் கரும்பைத் தின்பது போல் சப்பென் றிருந்தது. அதே கணத்தில் என் எழுத்தின்மீது ஓர் வெறுப் புத் தோன்றிற்று. என்னிடம் ஒரு வெறி கண்டது. என்னை யும் மீறிய வேகத்தில் என் பெட்டியைத் திறந்தேன். பிர சுரிக்கப்பட்டவையும், படாதவையும், அரைகுறையாக நின்றவையுமாக என் எழுத்துக்கள் கிடந்தன. அவ்வள வையும் வெளியே எடுத்து, இந்த இரண்டு தாள்களையும் அவற்றின்மேல் வைத்துக் கொளுத்திவிட்டேன். அந்தத் தீயின் மையத்தில் வெள்ளைக்கலையுடன் வீணையும் கையுமாய் அந்தப் பெண் நின்று கொண்டிருந்தாள்.

இதுதான் இந்தச் சோம்பேறியின் வாழ்க்கை. இனி எழுதமுடியாது, மன்னிக்கவேண்டும்.